# Beginner Course - இரட்சிப்பு

# 4

## இரட்சிப்பை இழக்க முடியுமா?

YESUDAS SOLOMON

# பொருளடக்கம்

1. இரட்சிப்பை இழக்க முடியாது என்பதற்கான காரணங்கள்
2. இரட்சிப்பை இழக்க முடியும் என்பதற்கான காரணங்கள்
3. இதில் எது உண்மை?

# இரட்சிப்பை இழக்க முடியாது என்பதற்கான காரணங்கள்

Once Saved Always Saved; Eternal Security

# இரட்சிப்பை இழக்க முடியாது என்பதற்கான காரணங்கள்

1. கிருபையினால் உண்டானது - தேவனுடைய ஈவு
   - எபே 2:8,9 - **கிருபையினாலே** விசுவாசத்தைக்கொண்டு இரட்சிக்கப்பட்டீர்கள்; இது உங்களால் உண்டானதல்ல, இது **தேவனுடைய ஈவு**; ஒருவரும் பெருமைபாராட்டாதபடிக்கு இது கிரியைகளினால் உண்டானதல்ல;

## இரட்சிப்பை இழக்க முடியாது என்பதற்கான காரணங்கள்

2. தேவனே தம் சித்தப்படி விருப்பத்தையும், செய்கையையும் நமக்குள் உண்டாக்குகிறார்

- பிலி 2:13 - ஏனெனில் தேவனே தம்முடைய தயவுள்ள சித்தத்தின்படி **விருப்பத்தையும் செய்கையையும்** உங்களில் உண்டாக்குகிறவராயிருக்கிறார்.

# இரட்சிப்பை இழக்க முடியாது என்பதற்கான காரணங்கள்

3. தேவன் நம்மோடு நித்திய உடன்படிக்கை செய்துள்ளார்

- *எரே 32:40 - அவர்களுக்கு நன்மைசெய்யும்படி, நான் அவர்களை விட்டுப் பின்வாங்குவதில்லையென்கிற **நித்திய உடன்படிக்கையை** அவர்களோடே பண்ணி, அவர்கள் என்னைவிட்டு அகன்று போகாதபடிக்கு, எனக்குப் பயப்படும் பயத்தை அவர்கள் இருதயத்திலே வைத்து..*

# இரட்சிப்பை இழக்க முடியாது என்பதற்கான காரணங்கள்

4. தேவன் தான் நம்மை பரிசுத்தமாக்குகிறவர், நாமல்ல
   - லேவி 20:8 - நான் உங்களைப் பரிசுத்தமாக்குகிற கர்த்தர்.

# இரட்சிப்பை இழக்க முடியாது என்பதற்கான காரணங்கள்

5. நம்முடைய வாழ்வில் நீதியை பெருகப்பண்ணுகிறவர் தேவனே

- *ஓசி 10:12* - **கர்த்தர்** வந்து **உங்கள்மேல் நீதியை வருஷிக்கப்**பண்ணுமட்டும், அவரைத் தேடக் காலமாயிருக்கிறது.

## இரட்சிப்பை இழக்க முடியாது என்பதற்கான காரணங்கள்

6. தேவனுக்குள் நாம் ஏற்கனவே பரிபூரணமுள்ளவர்கள்
   - கொலோ 2:10 - சகல துரைத்தனங்களுக்கும் அதிகாரத்துக்கும் தலைவராயிருக்கிற அவருக்குள் நீங்கள் பரிபூரணமுள்ளவர்களாயிருக்கிறீர்கள்.

# இரட்சிப்பை இழக்க முடியாது என்பதற்கான காரணங்கள்

7. புதிய மனுஷனை தரித்துக்கொண்டிருக்கிறோம்
   - கொலோ 3:10 - தன்னைச் சிருஷ்டித்தவருடைய சாயலுக்கொப்பாய்ப் பூரண அறிவடையும்படி புதிதாக்கப்பட்ட **புதிய மனுஷனைத் தரித்துக்கொண்டிருக்கிறீர்களே.**

# இரட்சிப்பை இழக்க முடியாது என்பதற்கான காரணங்கள்

8. ஆக்கினைத் தீர்ப்பு இனி நமக்கு கிடையாது
   - ரோம 8:1,2 - கிறிஸ்து இயேசுவுக்குட்பட்டவர்-களாயிருந்து, மாம்சத்தின்படி நடவாமல் ஆவியின்படியே நடக்கிறவர்களுக்கு **ஆக்கினைத்தீர்ப்பில்லை**. கிறிஸ்து இயேசுவினாலே ஜீவனுடைய ஆவியின் பிரமாணம் என்னைப் பாவம் மரணம் என்பவைகளின் பிரமாணத்தினின்று **விடுதலையாக்கிற்றே**.

# இரட்சிப்பை இழக்க முடியாது என்பதற்கான காரணங்கள்

## 9. நாம் தேவனுடைய ஜனமாய் இருக்கிறோம்

- *1 பேது 2:9 - நீங்களோ, உங்களை அந்தகாரத்தினின்று தம்முடைய ஆச்சரியமான ஒளியினிடத்திற்கு வரவழைத்தவருடைய புண்ணியங்களை அறிவிக்கும்படிக்குத் தெரிந்துகொள்ளப்பட்ட சந்ததியாயும், ராஜரீகமான ஆசாரியக்கூட்டமாயும், பரிசுத்த ஜாதியாயும், அவருக்குச் **சொந்தமான ஜனமாயும்** இருக்கிறீர்கள்.*
- *1 பேது 2:10 முன்னே நீங்கள் தேவனுடைய ஜனங்களாயிருக்கவில்லை, இப்பொழுதோ **அவருடைய ஜனங்களாயிருக்கிறீர்கள்**; முன்னே நீங்கள் இரக்கம் பெறாதவர்களாயிருந்தீர்கள், இப்பொழுதோ இரக்கம் பெற்றவர்களாயிருக்கிறீர்கள்.*

# இரட்சிப்பை இழக்க முடியும் என்பதற்கான காரணங்கள்

# இரட்சிப்பை இழக்க முடியும் என்பதற்கான காரணங்கள்

1. இரட்சிப்பு நிறைவேற பிரயாசப்பட வேண்டும்

- பிலி 2:12 - ஆதலால், எனக்குப் பிரியமானவர்களே, நீங்கள் எப்பொழுதும் கீழ்ப்படிகிறபடியே, நான் உங்களுக்குச் சமீபமாயிருக்கும்பொழுது மாத்திரமல்ல, நான் தூரமாயிருக்கிற இப்பொழுதும், அதிக பயத்தோடும் நடுக்கத்தோடும் உங்கள் **இரட்சிப்பு நிறைவேறப் பிரயாசப்படுங்கள்**.

# இரட்சிப்பை இழக்க முடியும் என்பதற்கான காரணங்கள்

2. முடிவு பரியந்தம் நிலை நிற்பவனே இரட்சிக்கப்படுவான்

- மத் 24:13 - முடிவுபரியந்தம் நிலைநிற்பவனே இரட்சிக்கப்படுவான்.

# இரட்சிப்பை இழக்க முடியும் என்பதற்கான காரணங்கள்

3. பரிசுத்தமாய் இருங்கள் என்று வேதம் சொல்லுகிறது
   - *1 பேது 1:15,16 - உங்களை அழைத்தவர் பரிசுத்தராயிருக்கிறதுபோல, நீங்களும் உங்கள் நடக்கைகளெல்லாவற்றிலேயும் பரிசுத்தராயிருங்கள். நான் பரிசுத்தர், ஆகையால் நீங்களும் பரிசுத்தராயிருங்கள் என்று எழுதியிருக்கிறதே.*

# இரட்சிப்பை இழக்க முடியும் என்பதற்கான காரணங்கள்

4. இயேசுவுக்குள் தேறினவர்களாய் வளரவேண்டும்
- கொலோ 1:28 - எந்த மனுஷனையும் கிறிஸ்து **இயேசுவுக்குள் தேறினவனாக நிறுத்தும்படிக்கு**, அவரையே நாங்கள் அறிவித்து, எந்த மனுஷனுக்கும் புத்திசொல்லி, எந்த மனுஷனுக்கும் எல்லா ஞானத்தோடும் உபதேசம்பண்ணுகிறோம்.

# இரட்சிப்பை இழக்க முடியும் என்பதற்கான காரணங்கள்

5. வேதம் இரட்சிக்கப்பட்டவர்களை பார்த்து, பாவங்களை விட்டு விடுங்கள் என்றும் விட்டு விலகுங்கள் என்றும் சொல்லுகிறது

- *கொலோ 3:5,8 - விட்டு விடுங்கள்*
- *1 பேது 2:11 - விட்டு விலகுங்கள்*

## இரட்சிப்பை இழக்க முடியும் என்பதற்கான காரணங்கள்

6. பரிசுத்தமாகுதலை பூரணப்படுத்த வேண்டும்
   - 2 கொரி 7:1 - இப்படிப்பட்ட வாக்குத்தத்தங்கள் நமக்கு உண்டாயிருக்கிறபடியினால், பிரியமானவர்களே, மாம்சத்திலும் ஆவியிலும் உண்டான எல்லா அசுசியும் நீங்க, நம்மைச் சுத்திகரித்துக்கொண்டு, **பரிசுத்தமாகுதலைத்** தேவபயத்தோடே **பூரணப்படுத்தக்கடவோம்**.

# இரட்சிப்பை இழக்க முடியும் என்பதற்கான காரணங்கள்

7. தேவ கிருபை பரிசுத்தமாய் நடக்கவும், வருகைக்கு ஆயத்தமாய் இருக்கவும் போதிக்கிறது

- தீத்து 2:11-13 - எல்லா மனுஷருக்கும் இரட்சிப்பை அளிக்கத்தக்க **தேவகிருபையானது** பிரசன்னமாகி, நாம் அவபக்தியையும் லௌகிக இச்சைகளையும் **வெறுத்து**, தெளிந்த புத்தியும் நீதியும் தேவபக்தியும் உள்ளவர்களாய் இவ்வுலகத்திலே **ஜீவனம்பண்ணி**, நாம் நம்பியிருக்கிற ஆனந்த பாக்கியத்துக்கும், மகா தேவனும் நமது இரட்சகருமாகிய இயேசுகிறிஸ்துவினுடைய மகிமையின் பிரசன்னமாகுதலுக்கும் எதிர்பார்த்துக்கொண்டிருக்கும்படி நமக்குப் **போதிக்கிறது**.

# இரட்சிப்பை இழக்க முடியும் என்பதற்கான காரணங்கள்

8. தேவனால் பிறந்தவன் தன்னை காக்க வேண்டும்

- *1 யோவா 5:18 - தேவனால் பிறந்த எவனும் பாவஞ்செய்யானென்று அறிந்திருக்கிறோம்; தேவனால் பிறந்தவன் தன்னைக் **காக்கிறான்**, பொல்லாங்கன் அவனைத் தொடான்.*

# இரட்சிப்பை இழக்க முடியும் என்பதற்கான காரணங்கள்

9. வசனத்தை கைக்கொண்டு நடக்க வேண்டும்
   - 2 தீமோ *1:13* - நீ கிறிஸ்து இயேசுவைப்பற்றும் விசுவாசத்தோடும் அன்போடும் என்னிடத்தில் கேட்டிருக்கிற ஆரோக்கியமான **வசனங்களின் சட்டத்தைக் கைக்கொண்டிரு.**

# இதில் எது உண்மை?

## இரட்சிப்பை இழக்க முடியுமா அல்லது முடியாதா?

- இரட்சிப்பின் அனுபவம் அல்லது கிறிஸ்தவ வாழ்வு என்பது ஒரு நாணயம் (Coin) போன்றது
- இதற்கு 2 பக்கங்கள் உண்டு




தேவனுடைய பங்கு






மனிதனின் பங்கு

# 1. கிருபை

தேவனுடைய பங்கு:

- எபே 2:8,9 - கிருபையினால் இரட்சிப்பு கிடைக்கிறது, இது தேவனுடைய ஈவு

மனிதனின் பங்கு:

- தீத்து 2:11-13 - இதே தேவனுடைய கிருபை நாம் பரிசுத்தமாய் நடக்கவும் இயேசுவின் வருகைக்கு ஆயத்தமாய் இருக்கவும் போதிக்கிறது

## 2. பரிசுத்தம்

மனிதனின் பங்கு:

- லேவி 20:7 - நீங்கள் உங்களை பரிசுத்தப்படுத்தி பரிசுத்தராய் இருங்கள்

தேவனுடைய பங்கு:

- லேவி 20:8 - நான் உங்களை பரிசுத்தமாக்குகிற கர்த்தர்

# 3. நீதியாய் நடத்தல்

மனிதனின் பங்கு:

- ஓசியா 10:12 - நீங்கள் நீதிக்கென்று விதைவிதையுங்கள்; ..அறுப்பு அறுங்கள்; ..பண்படுத்துங்கள்; (அவர் வரும் வரை)அவரைத் தேடுங்கள்

தேவனுடைய பங்கு:

- ஓசியா 10:12 - கர்த்தர் வந்து உங்கள் மேல் நீதியை வருஷிக்கப்பண்ணுவார்

# 4. இரட்சிப்பு

மனிதனின் பங்கு:

- பிலி 2:12 - அதிக பயத்தோடும் நடுக்கத்தோடும் உங்கள் இரட்சிப்பு நிறைவேற பிரயாசப்படுங்கள்

தேவனுடைய பங்கு:

- பிலி 2:13 - தம் சித்தத்தை நமது விருப்பமாகவும், செய்கையாகவும் நமக்குள் உண்டாக்குகிறார்

# 5. பாவம் செய்யாமல் இருப்பது

தேவனுடைய பங்கு:

- *1 யோவா 5:18a* - தேவனால் பிறந்த எவனும் பாவம் செய்யான்

மனிதனின் பங்கு:

- *1 யோவா 5:18b* - தேவனால் பிறந்தவன் தன்னை காக்கிறான்

# 6. விசுவாசம்

தேவனுடைய பங்கு:

- எபி 12:1 - விசுவாசத்தை துவக்குகிறவரும் முடிக்கிறவரும் இயேசு கிறிஸ்துவே

மனிதனின் பங்கு:

- எபி 12:1 - நமக்கு நியமித்திருக்கிற ஓட்டத்தில் பொறுமையோட ஓட வேண்டும்

# 7. வாக்குத்தத்தம்

தேவனுடைய பங்கு:

- 2 தெச 3:3 - கர்த்தரோ உண்மையுள்ளவர், அவர் உங்களை ஸ்திரப்படுத்தி, தீமையினின்று விலக்கிக் காத்துக்கொள்ளுவார்.

மனிதனின் பங்கு:

- 2 தெச 3:4 - மேலும், நாங்கள் கட்டளையிடுகிறவைகளை நீங்கள் செய்துவருகிறீர்களென்றும், இனிமேலும் செய்வீர்களென்றும், உங்களைக்குறித்துக் கர்த்தருக்குள் நம்பிக்கையாயிருக்கிறோம்.

# முடிவுரை

தேவனுடைய துணை இல்லாமல் நாம் பரலோகம்/மோட்சம் செல்ல முடியாது;

நம்முடைய ஒத்துழைப்பு இல்லாமல் தேவனால் நம்மை பரலோகம்/மோட்சம் கொண்டு செல்லமுடியாது

யோவான் *16:13* சத்திய ஆவியாகிய பரிசுத்த ஆவியானவர் வரும்போது, சகல சத்தியத்திற்குள்ளும் உங்களை நடத்துவார்; அவர் தம்முடைய சுயமாய்ப் பேசாமல், தாம் கேள்விப்பட்டவைகள் யாவையுஞ்சொல்லி, வரப்போகிற காரியங்களை உங்களுக்கு அறிவிப்பார்.

# முடிவுரை

- இந்த வீடியோ மூலமா கேட்டவைகள் உங்களுக்கு புரிந்திருக்கும் என்று நெனைக்கிறேன்.
- இரட்சிப்பை குறித்து மேலும் அறிந்துக்கொள்ள எங்களுடைய மற்ற வீடியோக்களையும் பாருங்கள்.
- ஏதாவது கேள்விகள் இருந்தா *WhatsApp* அல்லது *Email* மூலமாக தொடர்புக்கொள்ளுங்கள்.
- இரட்சகராகிய இயேசு கிறிஸ்து உங்களை ஆசீர்வதிப்பாராக.

